# தமிழகம்

சிறப்பு ஆசிரியர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார்

மலர் 5] சோபகிருது பங்குனி 3, 16—3—64 கிழமை இதழ். விலை – 10 காசுகள். [இதழ் 15




அப்பர் தரும் விருந்து

## அரியரும் எளியரும்

கடவுள் எங்கும் பரந்து விரிந்த பரம்பொருளாக இருக்கிறார். நுண் பொருளாக விளங்குகிறார். அருமையான இசை வல்லாராக இருக்கிறார்- ஆடற்கலை வல்லுநராகத் திகழ்கிறார். நஞ்சுண்ட கண்டராக இருக்கிறார். அத்தகைய கடவுள் காட்சிக்கு அரியராகவும் இருக்கிறார்; எளியராகவும் இருக்கிறார்.

யாருக்கு அரியர்? யாருக்கு எளியர்? நியாயமான கேள்விதான். இதற்கு நமது அப்பரடிகளே மிக அழகாக பதில் சொல்லுகிறார். ஆம், இதய பூர்வமாகத் தொண்டு செய்யும் தூய தொண்டர்களுக்கு அவர் காட்சிக்கு மிக எளியராகவும், ஏனையோர்க்கு காட்சிக்கு மிகமிக அரியராகவும் இருக்கிறாராம். அனுபவ சித்தாந்தமும் இதுதானே!



அப்பரடிகள் இதனைக் கூறுகிறார் பாருங்கள்:

“பரியர் நுண்ணியர் பார்த்தற் கரியவர்
அரிய பாடலர் ஆடலர் அன்றியும்
கரிய கண்டத்தர் காட்சி பிறர்க்கெலாம்
அரியர் தொண்டர்க் கெளியர் ஐயாறரே”

# வாழ்விக்க வந்தோர் வரலாறு

## 34. திருநீலநக்கர்

(முன் இதழ் தொடர்ச்சி)

திருநீலநக்கர் இவ்வாறு தொடர்ந்து திருத்தொண்டாற்றிவரும் நாளில், 'என்றும் புதிய செந்தமிழ்ப் பழமறை மொழிந்த பூசுரார் திருஞானசம்பந்தரின் சிறப்புகளைக் கேள்வியுற்றார் - அவரைக் கண்டு தொழுதல் வேண்டும் என்ற வேட்கை மீக்கூர்ந்தார்.

அவ்வமயம் சீர்காழிப் பிள்ளையான திருஞான சம்பந்தர். 'விண்பிறங்கு வேணியார்தமைத் தொழச் சாத்தமங்கைக்கு எழுந்தருளினார். திருநீலகண்டப் பெரும்பாணரும் பாணர்தம் அன்பு மடவாரும், ஏராளமான அடியவர்களும் உடன் வந்தனர். செய்தியறிந்த திருநீலநக்கர் சிந்தைமிக மகிழ்ந்தார். ஊரெங்கும் கொடிகள், தோரணங்கள் கட்டி அழகுபடுத்தினார். காவணங்கள் பல அமைத்தார். திருஞான சம்பந்தரையும் அவரோடு உடன் வந்த சிவனடியார்களையும் வரவேற்றார். அன்றிரவு திருஞான சம்பந்தருக்கும், அடியார்கட்கும் தமதில்லத்தில் திருவமுது படைத்தார்.

இரவு, திருஞான சம்பந்தர் திருநீல நக்கரின் இல்லத்திலேயே தங்கினார். திருநீல நக்கரை அருகழைத்து, 'திருநீல நக்கரே! இன்றிரவு திருநீலகண்டப் பெரும்பாணரும் அவர்தம் இல்லக்கிழத்தியாரும் தங்குதற்கு ஓர் இடம் அளியுங்கள்' என்றார். நாயனார் நனிமகிழ்வெய்தி, தமது நடுமனையில் வேதியின் பக்கலில் இருவர்க்கும் ஓர் இடம் வழங்கினார். அவ்வமயம், அங்கு வேதிகையிலுள்ள 'அருத செந்நீ' (நித்யாக்கினி) ஓங்கி வளர்ந்து முன்னினும் ஒளிவிட்டெறிந்தது. இதனைக் கண்ணுற்ற நாயனார், இதயம் பூரித்தார். பெரும்பாணர் தம் துணையோடு அங்கேயே பள்ளி கொண்டார்.

இருள் கழிந்தது! பொழுது புலர்ந்தது; இமயமங்கையின் திருமலையமுதருந்திய திருஞான சப்பந்தர் அயவந்திக்கு வந்து, அங்கு எழுந்தருளியுள்ள பிள்ளைமதி சூடிய பெம்மானையும், திருநீல நக்கரையும் சிறப்பித்துச் செந்தமிழ்த் திருப்பதிகம் புனைந்தார். சின்னாட்கள் அங்கேயே தங்கிப் பதிகநாண்மலர்கொண்டு தம்பிரான் கழல் பரவினார். பின், நாயனாருக்கு விடைகொடுத்துவிட்டுப் பல்வேறு பதிகட்கும் சென்று பாடிப் பரவினார்,

திருஞான சம்பந்தரைப் பிரிந்து வாழ நாயனாரின் மனம் பொறுக்கவில்லை. எனினும், திருஞான சம்பந்தரின் கட்டளைக்கேற்ப நாயனார் சாத்தமங்கையிலேயே இருந்தார். நாயனார் சாத்தமங்கையில்தான் இருந்தார். அவர் உள்ளமோ 'நற்றமிழ் வல்ல ஞான சம்பந்தரிடத்தி'லேயே படித்திருந்தது.

திண்பெருந் தொண்டரான திருநீல நக்கர் இடையிடையே திருநாவுக்கரசர் செல்லுந் திருப்பதிகட்கெல்லாம் தாமும் சென்று அவரைக் கண்டு தொழுது மகிழ்வார். இங்ஙனம் ஒழுகிவரும் நாளில், சொற்றமிழ் பாடும் தூய வேதியரான திருஞான சம்பந்தரின் திருமணத் திறத்தைச் சேவித்துக கங்கைவார் செஞ்சடையார் கழலிணைப் பேற்றினைப் பெற்றார். திருநீல நக்கர். 'சிவபெருமானுக்கும், சிவனடியார்கட்கும் திருத்தொண்டு செய்தல் திருமறை தெளிவுறுத்தும் உண்மை' என்ற கொள்கையில் அசையாத-அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டு, அவ்வழி நின்று தொண்டு செய்தார். திருநீல நக்கர் பெறற்கரும் பேறும் பெற்றார். தொண்டர் தம் பெருமை சொல்லிடப் போமே?

---

(9ஆம் பக்கத் தொடர்ச்சி)

யத்திற்கும் தொண்டு புரிய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்".

பிறகு விடுதி மாணவ மாணவியரின் பல்வேறு கலைநிகழ்ச்சிகளும் சிறப்பாக நடைபெற்றன. தேசிய ஒருமைப்பாட்டையும், மொழி ஒருமைப்பாட்டையும் வலியுறுத்தும் வண்ணம் பல்றோ இந்திய மொழிகளிலும் நிகழ்ச்சிகள் ஏற்பாடு பெய்யப் பெற்றிருந்தன.

தவத்திரு தந்தை அவர்கள் விடுதி மாணவர்கள் தயாரித்த கையெழுத்துப் பிரதியின் ஆண்டு மலரை வெளியிட்டார்கள் .திரு. ஆ. மாரிமுத்துப்பிள்ளை பரிசுகள் வழங்கினார்கள்.

# மருத்துவர்களிடமிருக்கும் மருந்து மற்றவர்தம் நோய் தீர்ப்பதற்காக

[திருச்சி அருள்நெறித் திருக்கூட்டத்தின் சார்பில் நடைபெற்ற "ஏழில் இருபது" என்ற முதல் தொடர்ச் சொற்பொழிவின் முன் தொடர்ச்சி]

ஒருவன் ஆவுரித்துத் தின்றுழலும் புலையனாகவே இருந்தாலும், அவன் சான்றோர்கள்—அடியார்கள் மத்தியிலே வாழக்கூடிய சமுதாய வாழ்க்கையை மேற்கொண்டுவிடுவானானால், சமுதாயத்தில் வாழுகின்ற மற்றவர்களைப் பார்த்துத் தன்னினும் மூத்த சான்றோர்களைப் பார்த்து—அவர்கள் வாழும் முறைகளைக் கவனத்தில்கொண்டு, அவன் இதுதான் நல்லவாழ்க்கை போல் இருக்கிறது என்று கருதி ஆவுரித்துத் தின்னுகின்ற பழக்கத்திற்கே முழுக்குப் போட்டு விடக்கூடும். இதனை நன்றாக உணர்ந்தவர் நமது அப்பரடிகள்.

எனவேதான்,

"அங்கமெலாம் குறைந் தழுகு
தொழு நோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும்
புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந் தார்க்
கன்ப ராகில்
அவர்கண்டீர் யாம்வணங் கும்
கடவு ளாரே!"

என்றார். தாம் வணங்குகின்ற கடவுள் என்று சொல்லுகின்ற அளவில் நாம் அந்தப்பாடலைப் பார்க்கிறோம். ஒப்புயர்வற்ற சமுதாய ஒருமைப்பாட்டை, சாதிகுல கோத்திரங்கட்கு அப்பாற்பட்ட சமுதாயத்தை உருவாக்கவேண்டும் என்பது அப்பரடிகளின் கருத்து.

அடுத்து, எல்லாரும் வாழ வேண்டும்—இன்பமாக வாழ வேண்டும்; பொருள் உடைமை பிறருக்கு தந்து—உதவி வாழ்விப்பதற்கே என்ற உயர்ந்த தர்மகர்த்தாக் கொள்கையை அப்பரடிகள் குறிப்பிட்டிருக்கிறார். அவர் வாழ்ந்த ஏழாம் நூற்றாண்டில் "தர்மகர்த்தாக் கொள்கை" என்ற ஒரு கொள்கை இல்லை. எனினும், தர்மகர்த்தாக் கொள்கைக்கு வித்தூன்றுவது போல, அப்பரடிகள் பேசியிருக்கிறார்.

"இரப்பவர்க்கு ஈயவைத் தார்
ஈபவர்க்கு அருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட்கெல்லாம்
கடுநர கங்கள்வைத்தார்"

என்று கூறுகிறார். ஒருபெரிய மருத்துவர் இருக்கிறார். அவர் தம் பெட்டியிலே இருநூறு ரூபாய்க்கு நல்ல மருந்துகள் வைத்திருக்கிறார். அவ்வளவு மருந்துகளும் அவர்தம் சொந்தப் பணத்தில் வாங்கியவைகளே. எனினும், எல்லா மருந்துகளையும் அவரே உட்கொள்ள முடியுமா? நோயுற்றவர்களுக்குத்தானே கொடுக்க வேண்டும்? மருத்துவரிடத்தில் ஏராளமான நல்ல மருந்துகள் இருப்பதுபோல, சிலரிடத்திலே பெரும் பொருள் குவிந்துகிடக்கிறது. எதற்காக? இரப்பவர்கட்கு ஈவதற்காக மருத்துவர்களிடமிருக்கும் மருந்து மற்றவர்களின் உடல்நோய் தீர்பபதற்காக—செல்வர்களிடம்குவிந்து கிடக்கும் பணம் மற்றவர்களின் வறுமை நோய் தணிப்பதற்காக. ஆம். கடவுள் அப்போதே அவனிடம் சொல்லித்தான் பணத்தைக் கொடுத்திருக்கிறார். "யாராவது வந்து கேட்டால் இல்லையென்று சொல்லாமல் இயன்றதைக் கொடு" என்று சொல்லியிருக்கிறார். இரப்பவர்க்கு ஈவதற்காகப் பொருளை வைத்தார்—அப்படி இரப்பவர்க்கு இல்லை என்று சொல்லாமல் இயன்றதைக் கொடுப்பவர்களுக்கு அருளை வைத்தார். இரப்பவர்க்கு இல்லை என்று சொல்லிப் பொருளைச் சேமித்து வைக்கின்ற வஞ்சகர்களுக்கு எல்லாம் கடவுள் 'சடுநரகம்' வைத்திருக்கிறார். இதனையே, 'கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார்' என்று அழுத்தமாக—தெளி

## செல்வர்களிடம் குவிந்துள்ள செல்வம் இரப்பவர்களுக்கு ஈவதற்காக

# பாட்டாளிகளுக்குப் பரிந்துபேசுவதை இடைக்காலச் சமயம் மறந்துவிட்டது

வாகக் கூறுகிருர் நமது அப்பரடிகள்.

பொதுவாக, இடைக்காலத்திலே சமய உலகத்திற்கு வந்த ஆபத்துக் கூடச் செல்வந்தர்களால்தான். இடைக்காலத்திலே, பரம தரித்திரர்களான ஏழை மக்கட்கும், பாட்டாளிகட்கும் பரிந்து பேசுகிற கடமையைச் சமய உலகு மறந்துவிட்டது—அவ்வாறு பேசுவதினின்றும் விலகி விட்டது. ஏழாம் நூற்ருண்டில் வாழ்ந்த நமது அப்பரடிகள்'' ''உற்ருர் இல்லார்க்கு உறுதுணையாவான்'' என்று பேசினர். சமுதாயத்தில் யாரொருவர்க்கு உறவினர் இல்லையோ, யாரொருவருக்கு நண்பர்கள் இல்லையோ, யார் ஒருவர் தெருவில் அனதையாக விடப்பட்டாரோ அவருக்கு இறைவன் உற்றதுணை என்று பேசினர். ஆனல் இன்று, நமது சமயம் உற்ருர் உறவினர் இல்லாத அனதைகட்கு உறுதுணையாக இல்லை. எல்லா வசதிகளும், வாய்ப்பும் உள்ளவர்களுக்கே மேலும் மேலும் பரிவு காட்டுவதாக- மரியாதை கொடுப்பதாக இருக்கிறது.

அடுத்து, ''அற்ருர்க்கும் அலந்தார்க்கும் அருள்வானை'' என்றும் பேசுகிருர். அற்ருர்க்கும் அலந்தார்க்கும் அருள் செய்வது சமயத்தின் இயல்பு. சேக்கிழார் அருளிய பெரிய புராணத்தில் இறைவன் பல்வேறு சூழ்நிலைகளில், அற்ருர் போல—அலந்தார்போல கோலம் கொண்டு மண்மீது எழுந்தருளி வந்ததை காண்கிருேம். சிவபெருமான் என்ற திருக்கோலப் பொலிவோடு அவர் வரவில்லை. அவர், அற்ருர் போல, அலந்தார் போல வந்தபோதும் உரிய மதிப்பும் வரவேற்பும் கிடைத்தது அடியார்களின் இல்லங்களிலே. இன்று, இறைவனே அற்ருர் போல, அலந்தார் போல வந்தாலும் ஒருபிடிசோறு கிடைக்குமா என்பது ஐயப்பாடுதான்! நிலைமை அந்த அளவிற்கு மாறிவிட்டது. அற்ருர்க்கும் அலந்தார்க்கும் அருள் செய்கின்ற—உற்ருர் இல்லாதார்க்கு உறுதுணையாகின்ற அந்த உயர்ந்த சமய ஒழுக்கம் பரவ வேண்டும்-எல்லார்க்கும் கொடுப்பதுதான் வாழ்க்கையின் நோக்கம் — அதுதான் சமுதாய ஒழுக்கம் — அங்குதான் சமுதாயப் பண்பு வளர்கிறது. ஏழாம் நூற்ருண்டில் அப்பரடிகளிடத்தே இந்த உயர்ந்த சிந்தனை தோன்றியதை நாம் பார்க்கிருேம்.

பொதுவாக மனிதன் ஒருவன் தான், வாழ்க்கை என்ற இலட்சியத்தோடுபோராடுகின்ருன். பிறரோடு மனங்கலந்து பேசி, அன்பு கலந்து உறவாடிக்கூடி வாழ்வதுதானே மனித குலத்தின் உயர்ந்த இலட்சியம்!

''அன்பலால் பொருளுமில்லை
ஐயன் ஐயாறனர்க்கு''

என்று அப்பரடிகள் குறிப்பிடுகிருர் ஐயாறப்பரை நாம் கொண்டுபேசுப தேங்காய் பழத்தைப்பற்றிக் கவலைப்படவில்லை நாம் உண்மையிலேயே அன்புடையவர்களா—மெய்யன்பு உடையவர்களா இருக்கிருேமோ என்றுதான் அவர் பார்க்கிருர் அன்புதான் மனிதனை வளர்க்கிறது- அன்புதான் மற்றவர்களுக்கு நாம் உதவி செய்யவேண்டும் - மற்றவர்களை நம் மகிழ்விக்க வேண்டும் என்ற எண்ணத்தை எழுப்புகின்றது. அன்பில்லையானல் தன்னலவெறியே தலை தூக்கி நிற்கும். அன்பு இருந்தால் சமுதாயப் பற்றுத் தலை தூக்கி நிற்கும்.

சாதாரணமாகச் சிலவிலங்குகளையும் செடி கொடிகளையும் நாம் பார்க்கிருேம். அவை மக்கட் சமுதாயத்திலிருந்து பெற்றுக் கொள்வது மிகமிகக் குறைவு. திருப்பித் தருவதோ மிகமிக அதிகம். ஆம்.அவை பெற்றுக் கொண்டதைப் போன்று பல மடங்கு பயனைத் திருப்பிக் கொடுக்கின்றன. ஒரு கறவை மாட்டை எடுத்துக் கொள்வோம். அது ஒரு ரூபாய்த் தீனி தின்ருல், இரண்டு அல்லது மூன்று ரூபாய் மதிப்புள்ள பாலை நமக்குத் தருகிறது. ஒரு தென்னை மரம்! அதற்கு நாம் செலவழிப்பது எவ்வளவு? அதுநமக்குத் திருப்பித் தருவது எவ்வளவு என்று நீங்களே எண்ணிப்

## அன்பின்றேல் தன்னலவெறியே தலைதூக்கும்

## அன்பிருந்தால் சமுதாயப் பற்றுத் தலைதூக்கும்

# சமுதாயத்திலிருந்து குறைவாகப் பெற்றுக்கொண்டு நிறையத் திருப்பிக்கொடுக்க வேண்டும்

பாருங்கள். இப்படி விலங்குகளும், செடி கொடி மரங்களும் சமுதாயத்திலிருந்து கொஞ்சமாகப் பெற்றுக் கொண்டு. நிறையத் திருப்பிக் கொடுக்கின்றன. மனிதனோ சமுதாயத்திலிருந்து நிறையப் பெற்றுக் கொள்ளுகிறான். சிறிதளவு திருப்பித் தரக்கூட வெட்கப் படுகிறான். அப்படி ஏதேனும் கொஞ்சம் கொடுக்கத் தயாரானாலும் கொடுக்கும் அளவிற்கதிகமான பாராட்டைப்பெற விரும்பும் நிலையைப் பார்க்கிறோம். சமுதாயத்திற்கு நிறையக் கொடுக்கவேண்டும்—சமுதாயத்திலிருந்து குறைவாகவே பெற்றுக் கொள்ள வேண்டும். அதுதான்சிறந்த சமுதாயப்பண்பு - தூய அன்புடையவர்களின் இலட்சியம்.

அப்பரடிகள் பல ஆரவாரச் செயல்களை - போலிச் சடங்குகளைத் தம் பாடல்களில் சற்று கடுமையாகவே சாடிச் சொல்கிறார்.

கங்கை ஆடிலென்
  காவிரி ஆடிலென்
பொங்கு தண்கும
  ரித்துறை ஆடிலென்?
ஓங்குமா கடல்
  ஓதநீர் ஆடிலென்?
எங்கும் ஈசன்
  இலையென தார்க்கே'

என்று கேட்கிறார். நீ கங்கையில் போய் நீராடி வந்திருந்தாலும் காவிரியில் போய் நீராடி வந்திருந்தாலும் என்ன பயன்? எங்கும் ஈசன் இருக்கிறான் - எவ்வுயிரிலும் ஈசன் உறைகிறான் என்பதை நீ உணரவேண்டும் - உயிர்களிடத்து அன்பு செய்தல் வேண்டும் என்று வலியுறுத்துகின்றார். ஓவியத்தை உதாசீனப் படுத்திவிட்டு - ஒதுக்கித் தள்ளிவிட்டு ஓவியனைப் பாராட்டுவதில் என்ன பொருள் இருக்கிறது? இப்படிச் செய்வதால் ஓவியனைத் திருப்திப் படுத்திவிட முடியுமா? கவிதையைக் குழிவுக் கூடையில் போட்டுவிட்டுக் கவிஞனைப் பாராட்டுவதில் என்ன பொருள் இருக்கிறது? அப்படிச் செய்வதால் கவிஞன் திருப்தியடைந்து விடுவானா? ஓவியத்திற்கு நாம் செய்கிற சிறப்பு-''கவிதைக்கு நாம் வழங்குகிற பாராட்டுத்தான் கவிஞனுக்கு நாம் செய்கின்ற சிறப்பு. குழந்தைக்கு நாம் அளிக்கின்ற பாராட்டுத்தான் அக்குழந்தையின் தாய்க்கு நாம் செய்கின்ற சிறப்பு. இதுதான் உலக இயல்பு. ஆனால் நமது சமயத்தில் இன்று நடப்பதென்ன? இறைவனுக்கு எல்லாவகைச் சிறப்புக்களும் செய்கின்றோம். ஆனால், இறைவனின் உடைமையாக - பிரதிபிம்பமாக - நிழற்படமாக இருக்கிற மனித சமுதாயத்தை - மனித உயிர்களை - மனித குலத்தைப் புழுதியிலே புரளவிட்டுவிட்டு- சாக்கடையிலே மிதக்கும் புழுக்களைப் போலத் துடிக்க விட்டு விட்டு மனித குலத்தின் அப்பனாக - அம்மையாக - அன்புடைய மாமனும் மாமியுமாக - ஒண் பொருளுமாக விளங்குகிற இறைவனை எப்படித் திருப்திப் படுத்த முடியும்? சிறப்புச் செய்ய முடியும்?

கடவுளைச் சிலர் பயங்கரப் பொருளாக்கிவிட்டார்கள். இறைவனிடத்து பக்தியும் பரிவும் கொள்ள வேண்டும். கடவுளைக் கும்பிடா விட்டால் நரகம் கிடைக்கும் என்று அச்சுறுத்துகின்றார்கள். கடவுளைக் கும்பிட்டவனுக்கு மோட்சமும், கடவுளைக் கும்பிடாதவனுக்கு நரகமும் கிடைக்கும் என்றால் கடவுள் என்ன இலஞ்சம் வாங்குபவரா? கடவுளை நாம் புகழ்ந்து பாடும் பாடல்களை புகழ் உரைகளை இலஞ்சமாகப் பெற்றுக் கொண்டு கடவுள் மோட்சம் அருளுவார் என்று எண்ணுவது தவறு. அது நடக்கவே நடக்காது, இறைவனுக்கு நமது மன நெகிழ்ச்சியும், மனத் தூய்மையும் தான் தேவை. இவற்றை உண்டாக்கிக் கொள்ளத் தோத்திரப் பாடல்களையும் பிறவற்றையும் சாதனங்களாக வைத்துக் கொள்ளலாம். அவ்வளவு தான். கங்கையில் மீன் எப்போதும்தான் கிடைக்கிறது. காவிரியில் தவளை எப்போதும்

(8ஆம் பக்கம் பார்க்க)

# மனித குலத்தைச் சாக்கடையில் புரளவிட்டு மகேஸ்வரனைத் திருப்திப் படுத்த முடியுமா?




# தமிழகம்

அன்பாலே மக்கள்குலம் இணைந்து வாழும்
அருள்நெறியைப் பரப்புதலே எங்கள் நோக்கம்

மலர் 5] 16—3—64 [இதழ் 15


## மறு பரிசீலனை தேவை

இந்திய அரசின் தேர்வுகளை இந்தியில் எழுத 1965லிருந்து ஏற்பாடு செய்யப் பெறும் என்றும் ஆங்கிலத்திலிருந்து இந்திக்கு மாறுவதை நெடுநாட்களுக்குத் தள்ளிப் போடக் கூடாது என்றும் அதே காலத்தில் இந்திபேசாத மாநில மக்கள் பாதிக்கப்பெரு வண்ணம் ஒரு பொது முறை நிர்ணயிக்கப்பெற வேண்டும்'' என்றும் முதலமைச்சர்கள் மாநாட்டில் முடிவு செய்யப் பெற்றிருப்பதாகத் தெரியவருகிறது. முடிவின் முதல் இரண்டில் இருக்கும் தெளிவும் உறுதியும் மூன்றாவதில் இல்லை என்பது வெளிப்படை. இம்முடிவுகள் பொதுவாக நியாயமானவையாக இல்லை என்பதை நாம் வற்புறுத்த விரும்புகின்றோம்.

மொழி அறிவு வேறு – பொருளறிவு வேறு. திறமையின் அளவுகோல் பொருளறிவே யாகும். தாய்மொழியில்தான் பொருளறிவு சிந்தனையோடு பொருந்தியதாக – வளர்ச்சியின் கூறுகள் பொருந்தியதாக – தெளிவாக இருக்க முடியும். அதனால்தான் தாய்மொழி மூலம் கல்வி என்ற நியதி உலக அரங்கில் ஒத்துக்கொள்ளப் பெற்றிருக்கிறது.

இந்திய அரசின் தேர்வை இந்தியில் எழுதுவதானால் மொழி முட்டுப்பாடு முன்னின்று அல்லற்படுத்தும். மொழியின் காரணமாக திறமையும் பயனில்லாமல் போகிறது. இது நியாயமல்ல. இந்தி அலுவலக மொழியாயிருப்பது தவிர்க்க முடியாதது. அப்படியிருப்பதில் தவறில்லை என்பது நமக்கு உடன்பாடுதான். எனினும் அலுவலகமொழியாக இருக்கும் இந்தியில் ஒரு மொழி அறிவுத் தேர்வு எழுதப்பெற வேண்டும் என்று கூறினால் நியாயம் இருக்கிறது. நாம் புரிந்து கொள்ள முடியும். அதற்கு மாறாக எல்லாத் தேர்வுகளையும் இந்தியில் எழுதக் கூடிய ஏற்பாட்டைச் செய்வது நியாயமில்லை. ஆதலால் பொருளறிவு தொடர்புடைய எல்லாத் தேர்வுகளையும் அவரவர் தாய்மொழியிலேயே எழுதக் கூடியவகையிலேயே இந்தி அரசின் அலுவலர்கள் தேர்வு இருக்க வேண்டும், உடன் இந்தி மொழி அறிவுத் தேர்வும் எழுதவேண்டும். இதுவே சிறந்தது. ஆதலால் அரசினர் மீண்டும் தங்களுடைய முடிவுகளை பரிசீலனை செய்ய வேண்டும் என்பது நமது விருப்பம்.

— அடிகளார்.




# பண்பறிந்து செய்க

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவர் வாழ்வியற்கலையை நன்கு புரிந்துகொண்டு நூல்செய்த வாழ்வியற்கவிஞர். வாழக்கையில், நாம் சற்றும் எதிர்பாராதவண்ணம் பல நிகழ்ச்சிகள் நடைபெறுவதுண்டு, பழகிய நண்பர்கள் பகைவராவர் - பகைவர்கள் நண்பராவர். பகைவர்கள் நண்பர்களாவது இயற்கை, அதுவே மனிதகுல வளர்ச்சியின் அடையாளம். ஆனல், பழகிய நண்பர்கள் பகைவர்களாவது நம்மால் புரிந்துகொள்ள முடியாத ஒன்று. வள்ளுவர் நன்ருகப் புரிந்து கொண்டிருக்கிருர். நாம் பழகிய நண்பர்களை வளர்க்கவே விரும்புவோம். தவறுகண்டபோது திருத்துவோம். நிறைகண்டபோது பாராட்டுவோம். இதுவே சிறந்த நட்பியல் வாழ்க்கை. ஆனலும், நாம் நல்லது என்று கருதுவதனலேயே நமக்கு வேண்டியவர்களும் அதை நல்லது என்றே கருதுவர் என்று நாம் எப்படி எண்ண முடியும்? நன்மையை இனம் தெரிந்து கண்டுகொள்வதற்கு உரிய சூழலும் அதற்குரிய பயிற்சியும் வேண்டும். அஃதில்லாதவர்கள் நன்மையையும் தீமையெனக் கருதுவார்கள். இந்தச் சூழ்நிலையில்தான் நண்பர்கள் பிரிகிருர்கள்-நனியன்புக் காதலர்கள் பிரிகின்ருர்கள். ஒன்றைச் சொல்லுவதற்கு அல்லது செய்வதற்கு முன்னல் அதைக் கேட்டு ஒழுகுதற்குரிய சூழலில் — தகுதிப்பாட்டில் நண்பர்கள் இருக்கிருர்களா என்று பார்க்க வேண்டும். நிலத்தின் இயல்பு தெரியாமல் விதைபோடலாமா? பாத்திரத்தின் இயல்பு தெரியாமல் பண்டங்களை வைக்கமுடியுமா? அதுபோலத்தான் நன்மையைப் பெறுகின்றவனுடைய தகுதிப்பாடு அல்லது பண்பாடு கணக்கில் எடுத்துக்கொள்ளப் பெறவேண்டும். அதனல்தானே இறைவனும்கூட, வாழ்க்கை என்ற பண்ணையில் நம்மைப் பக்குவப்படுத்தி தக்கபோது அருள் வழங்குகின்ருன். இந்தச் சிந்தனை நம்முடைய வாழ்க்கையில் பல பொழுதுகளில் இல்லாமையாலேயே அவசரத்தின் காரணமாக நன்மைசெய்ய முந்திக்கொண்டு அவ்வழிப்பலரை இழக்கின்ருேம்.

நமக்கு மிகவும் வேண்டியவர் ஒருவர், அவர், வாழ்க்கையில் பல துறைகளில் வளரவேண்டும் என்று நாம் உண்மையிலேயே மனச்சாட்சிக்குச் சாட்சியாக விரும்பினேம். அதன் காரணமாக, அவருடைய வாழ்க்கையில் இருந்த இரண்டு குறைகளை அகத்தில் பரிவு கொண்டு சொல்லாற் கடிந்துரைத்தோம். ஆனல் அவருக்கு நாம் எடுத்துக்காட்டின் நன்றின் தன்மையை அறிந்துகொள்ள இயலாமையாலும் நம்முடைய பரிவில் ஐயப்பாடு தோன்றியமையாலும் நம்மைவிட்டுப் பிரிந்தே நெடுந்தூரம் போய்விட்டார். அன்று அவரிடத்தில் இருந்த தவறு இரண்டொன்று. இன்ருே, வாழும் சூழ்நிலை நண்பரைப் பகைவராக்கிக் கொண்டமையின் காரணமாகப் பகைவர்கள் பலர் நண்பர்களானுர்கள். நண்பன் பகைவனனல் வருகிற தீங்கைவிட, பகைவன் நண்பனனல் வருகின்ற தீங்கு அளவில் (ஆனலும் மனமாற்றத்தின் காரணமாக வரும் நட்பு விதிவிலக்கு - கருதியது முடித்தலுக்கு ஏற்படுத்திக் கொண்ட மாறுதலானல் இந்த உண்மை முழுதும் பொருந்தும்) ஆதலால், மேலும் குறைகளும் குற்றங்களும் பெருகி வாழ்க்கையே கொடுந்துன்பத்திற்கு ஆளாக்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கும்போது நமக்கு அளவு கடந்த வருத்தமே ஏற்படுகிறது. ஆகையால் நாம் நல்லது தானே சொல்லுகிறேம் - கேட்காமல் போகின்ருர்களே என்று அங்கலாய்த்துக்கொள்வதால்பயனில்லை. நன்மையைச் சொல்ல — செய்ய அதற்குரிய சூழ்நிலையையும் உருவாக்கிக்கொள்ளவேண்டும். யாருக்காகச் செய்யப்பெறுகிறதோ அவர் தம் தகுதிப்பாட்டையும் கணக்கில் எடுத்துக்கொண்டு செய்யவேண்டும். அப்படியில்லாத நன்மை உரிய பயனைத் தராததோடு, பல கெடுதல்களையும் விளைவிக்கும். எவ்வளவு அனுபவ ரீதியான — அற்புத உண்மை!

நன்றாற்ற லுள்ளும் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

# இந்த உலக மக்களுக்குத் தொண்டுசெய்வது இறைவனுக்குச் செய்யும் சிறந்த வழிபாடு

(5ஆம் பக்கத் தொடர்ச்சி)

தான் இருக்கிறது. அவற்றிற்கு ஞானம் வருகிறதா? கிடையாதே! ஏன்? அவற்றிற்குச் சிந்தனை கிடையாது. இந்த உலகத்தை நாம் போற்ற வேண்டும் - இந்த உலக மக்கட்குத் தொண்டு செய்ய வேண்டும். அதுதான் சிறந்த வழிபாடு.

இன்று பலர் மூட்டை கட்டிக்கொண்டு காசிக்குப் போவார்கள். ஆனால், சுற்றுப் புறத்திலே தங்கள் கொல்லைப் புறத்திலே - தெருமருங்கிலே- வாழப்பிறந்தும் வாழ வகையின்றி அவதிப்படுகின்ற காட்சியைக் கண்ணிருந்தும் காண மறுக்கிறார்கள் - விழியிருந்தும் குருடர்களாகிறார்கள். காசிக்குப் போவதில் தவறில்லை. ஆனால், தங்கள் கொல்லைப்புறத்திலே 'குய்யோ முறையோ'' என்ற கூக்குரல் கேட்கக் கூடாது - தெருப்பக்கத்திலே அழுகுரல் கேட்கக் கூடாது. அண்மையில்நடைபெற்ற உலகமாநாட்டில் வெளியான ஒருசெய்தி மத உலகத்திற்கே ஓர் அறைகூவலாக இருக்கிறது. அது, கிறித்தவ மதமாக இருந்தாலும் சரி இஸ்லாமிய மதமாக இருந்தாலும் சரி, திருநீற்று மதமாக இருந்தாலும் சரிதான். அந்த அறைகூவல் உலக மதங்கள் அனைத்திற்கும் பொதுவே! நாள் ஒன்றுக்கு உலகில் 10 ஆயிரம் பேர் உணவின்றிச் சாகிறார்கள் என்று அந்த மாநாட்டில் கூறப்பெற்றது. அப்படியானால், 'இம்மையே தரும் சோறும் கூறையும்' — 'அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள் செய்வனை, என்ற பாடல்கள் நடைமுறைக்கு வருவது எந்த நாள்? ஒன்று நடை முறைக்கு வந்துவிட்டால் அதை மெய்யென்று கூறுகிறோம் - நடைமுறைக்கு வராதபோது பொய்யென்றும் கற்பனையென்றும் சொல்லுகிறோம். ஏன் பழைய சமய இலக்கியங்களை - வரலாறுகளை நடைமுறைக்குக் கொண்டுவரக்கூடாது. அன்று திருவீழிமிழலையில் அப்பரடிகள் இறைவனிடம் படிக்காசு பெற்றுப் பஞ்சம் போக்கினார். பஞ்சத்தில் அடிபட்ட மக்களுக்குச் சோறு போட்டார். அதை இந்த 20-ம் நூற்றாண்டில் ஏன் செய்யக் கூடாது! என்றால், அன்று இறைவன் படிக்காசு கொடுத்தார், இன்றும் அப்படிக் கொடுத்தால் பஞ்சம் நீங்கத் தொண்டு செய்யலாம் என்று சிலர் கேட்கிறார்கள். அன்று அப்பரடிகளுக்குப் படிக்காசு கொடுக்கின்ற நிலையில் இறைவன் இருந்தான் - வாங்குகிற நிலையில் திருநாவுக்கரசர் இருந்தார். செப்பால் அடித்த ஒரு காசு கூட அப்பரடிகளிடம் இல்லை. ஓடும் கவந்தியுமே அவர் உடைமைகள்! சிவபெருமானின் திருவடிகளைத் தவிர வேறு ஒன்றையும் பற்றாதவர்.

(வளரும்)

# குழந்தைகளைக் கண்டித்து வளர்க்கவேண்டும் கண்கலங்காமலும் பார்த்துக் கொள்ளவேண்டும்

## திருவாதவூரர் திரு.வி.க. புண்ணியவிடுதி ஆண்டுவிழாவில் தவத்திரு அடிகளார்

குன்றக்குடி திருவாதவூரர் திரு. வி. க. புண்ணிய விடுதியின் ஆண்டு விழா 9-3-63ல் காரைக்குடி அருணகிரி அதிபர் திரு. ஆ. மாரிமுத்துப் பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்றது. இறைவணக்கத்தின்பின் திரு. கோ. சீனிவாசன் அனைவரையும் வரவேற்றார். திரு. ஏ ஆர். அருள்சாமி ஆண்டறிக்கை படித்தார்.

பின்னர் விடுதியின் படிவ வளர்ச்சி பற்றிய செய்திகளை விளக்கி தவத்திரு அடிகளார் அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

1951- ஆம் ஆண்டு விளைச்சல் குறைந்து போய் பல இடங்களிலும் கஞ்சித் தொட்டிகள் ஆரம்பித்துக் கஞ்சி ஊற்றிய காலம். அப்பொழுதுதான் இங்கும் ஒரு கஞ்சித் தொட்டி ஏற்பட்டது. அந்தக் கஞ்சித் தொட்டியால் அன்று 300க்கும் அதிகமான பேர் வந்து பயன் பெற்றனர். ஏராளமான குழந்தைகளும் வந்தார்கள். அந்தக் குழந்தைகள் அப்படியே வளர்ந்து விட்டால் அவர்களின் எதிர்காலம் பாழ்பட்டுப் போகுமே என்று கருதி, நாம் அவர்களில் சுறுசுறுப்பான 12 குழந்தைகளைத் தேர்ந்தெடுத்து இவ்விடுதியை ஆரம்பித்தோம். விடுதி நாளாவட்டத்தில் வளர்ந்து நமது சக்திக்கேற்ப அவ்வப்போது குழந்தைகளை அதிகமாகச் சேர்த்து வந்தோம். இப்போது, இங்கு 265 பேர் இருக்கிறார்கள். அவர்களில் 60 பேர் பெண்கள்.

சாதாரணமாக உங்களுக்குத் தெரியும், இந்திய சமுதாயத்தில் இடைத்தர- கடைத்தரக் குடிமக்கள்தான் பற்றாக்குறையினால் அதிகம் அவதிப்படுகிறார்கள். அப்படியே நிறுவனங்களைப் பொறுத்தவரை நமது நிறுவனங்கள் பற்றாக்குறையினால் அவதிப்படுவனவாக உள்ளன. எனினும், திருமுருகன் திருவருளால் அவை தமது இலட்சியத்தை நோக்கி வளர்ந்து கொண்டேயிருக்கின்றன. குழந்தைகளின் நல்லூக்கத்தாலும், மற்றவர்கள் பெருமுயற்சியாலும் நம் நிறுவனங்களை நல்ல முறையில் வளர்த்து விட முடியும் என்று நாம் கருதுகிறோம்.

பொதுவாக விளையாட்டு, பொழுது போக்கு இவையனைத்தும் இரண்டாம் பட்சம்தான். வேலைதான் முதற் குறிக்கோள். ஓய்வு என்றால் சோர்ந்து, சோம்பி உட்கார்ந்திருப்பதோ, உறங்குவதோ அல்ல. ஒரு வேலை பார்க்கும் போது, அதில் களைப்பு ஏற்பட்டால் இன்னொரு வேலை பார்ப்பதுதான் ஓய்வு. எனவே, குழந்தைகளை இந்த முறையில் பழக்க வேண்டும்.

குழந்தைகளை நன்றாகப் பழக்க வேண்டும்; கண்டித்து வளர்க்க வேண்டும்- அதே நேரத்தில் கண் கலங்காமலும் பார்த்துக் கொள்ள வேண்டும். குழந்தைகள் எதிர்காலத்தைப் பற்றி அதிகமாகச் சிந்தித்துவளர வேண்டும்.

விழாவிற்குத் தலைமை ஏற்கும் திரு. மாரிமுத்து அவர்கள் உள்ளத்தாலும், குணத்தாலும் தங்கம் போன்றவர். அவர்களையும், மற்றவர்களையும் உள்ளன்போடு வரவேற்கிறோம்; வாழ்த்துகிறோம்.

அடுத்து, தலைவர் திரு. ஆ. மாரிமுத்துப் பிள்ளை தமது தலைமையுரையில் குறிப்பிட்டதாவது:

"இல்லாதார்க்கு உதவுவது புண்ணியம்; எளியோரை உயர்த்துவது புண்ணியம்; அறச்செயல்களைச் செய்வது புண்ணியம்- இவற்றுள் எல்லாம் தலைசிறந்த புண்ணியம் கல்வி வழங்குவது. தவத்திரு அடிகளார் அவர்கள் இதை நன்குணர்ந்து, பற்பல கல்வி நிலையங்களையும், புண்ணிய விடுதிகளையும் தொடங்கி நடத்திவருகிறார் தவத்திருஅடிகளார் அவர்களின் திருமுருகன் திருத்தலமான குன்றக்குடியின் பெயரும் புகழும் திக்கெட்டும் பரவியுள்ளது".

மேலும் அவர் பேசுகையில் குறிப்பிட்டதாவது: 'தவத்திரு அடிகளார் அவர்களின் அரவணைப்பில் வாழும் பேறு பெற்ற இந்த விடுதி மாணவர்களும் மாணவியரும் அடிகளார் அவர்கள்வலியுறுத்துவது போல நல்ல தாய் மொழிப் பற்றும், பன்மொழியறிவும் சமயப் பற்றும் மனித குல ஒருமைப் பாடும், தேசிய ஒருமைப் பாட்டுணர்வும் சிறந்த உழைப்பார்வமும் உடையவர்களாக வளர்ந்து இந்த நாட்டுக்கும் மக்கட் சமுதா

(2ஆம் பக்கம் பார்க்க)

# செய்திகள்

## பல்லடம் அமரன் ஜெயப்பிரகாசர் 6-வது ஆண்டு நினைவு விழா

பல்லடம் ஸ்ரீ அமரன் ஜெயப் பிரகாஷ் ஆருவது ஆண்டு நினைவு விழா 25-2-64 முதல் 29-2-64 வரை பல்லடம் ஸ்ரீ ஆதிவிநாயகர் சந்நிதியில் சிறப்பாக நடைபெற்றது. 27-2-64 விழாவிற்கு திருப்பூர் அருள்நெறி வார வழிபாட்டுத் திருக்கூட்டக்காரியதரிசி திரு சி. ஏ. ஞானசுந்தரம் தலைமை வகித்தார். தவத்திரு அடிகளார் அவர்கள் சிறப்புரை யாற்றினுர்கள்.

## மணமக்கள் வாழ்க!

கோவை ஸ்டேன்ஸ் பேக்கரி உரிமையாளர் திரு சி. ஜி. நடராஜனுக்கும், கோவை திரு. சி. வெங்கடசாமி அவர்களின் புதல்வி வி. ஜோதி இலட்சுமிக்கும் 26-5-64 ல் கோவை ஸ்டேன்ஸ் மில் கல்யாண மண்டபத்தில் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் தமிழ் முறைப்படி திருமணம் நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் மணமக்களை வாழ்த்திய பின், பேரூர் தவத்திரு இராமசாமி அடிகளார், திரு. போ. ரா. கிருஷ்ணமூர்த்தி, கவியரசு கு. நடேச கவுண்டர், திரு. எம். பூபதி, தமிழ் அறிஞர் ப. சு. மணியம் ஆகியோர் பாராட்டி வாழ்த்தினுர்கள்.

மணமக்கட்கு நமது மணமார்ந்த வாழ்த்துக்கள்!

## உடுமலை கழக உயர்நிலைப்பள்ளி இலக்கிய மன்றம்

உடுமலை கழக உயர்நிலைப் பள்ளி இலக்கியமன்றத்தின் ஆண்டு நிறைவு விழா 26-2-64ல் உடுமலை மாவட்ட நடுவர் திரு. ஆர். மாணிக்கம், பி. எஸ்ஸி, பி. எல் தலைமையில் நடைபெற்றது. திரு. ஆர். கிருஷ்ணசாமி பி. எஸ்ஸி பி. டி அனைவரையும் வரவேற்ருர். தவத்திரு அடிகளார் அவர்கள், 'இளங்கோவும்கம்பனும்' என்பது பற்றி அரியதோர் உரை நிகழ்த்தினுர்கள். தவத்திரு அடிகளார் அவர்கள் பேசுகையில் இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்திலும், கம்பனின் இராமகாதையிலும் வருகின்ற முக்கிய கதாநாயகர்களுக்குள்ள ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துக் கூறிச் சிறந்ததொரு திறனாய்வு செய்தார்கள். இலக்கிய மன்றச் செயலர் நன்றி கூறினுர்.

## ஹரிஜன நல சுற்றுப்பயணம்

தவத்திரு அடிகளார் அவர்கள் 28-2-64 காலை குன்றக்குடியிலிருந்து புறப்பட்டு, சிறுசாக்கவயல், குளப்பட்டி, பிரம்பு வயல், ஜெயங்கொண்டான், பெத்தானேந்தல், பெரியகோட்டை ஆகிய கிராமங்களில் சுற்றுப்பயணம் செய்து, ஆங்காங்குள்ள ஹரிஜன முக்கியஸ்தர்களைக் கண்டு அவர்களின் குறைகளைப் பரிவோடு கேட்டறிந்து தம்மால் இயன்றதைச் செய்வதாகக் கூறினுர்கள். பிறகு சாக்கோட்டை வழித் தங்கல் மனையில் ஹரிஜன நல சேவா சங்கத்தின் செயற்குழுக் கூட்டம் நடைபெற்றது. ஹரிஜன இளைஞர்களின் வேலைவாய்ப்புப் பற்றியும், ஆங்காங்கு சங்கங்கள் இன்னும் அமைக்கப் பெருத இடங்களில் சங்கங்கள் அமைப்பது பற்றியும் தவத்திரு அடிகளார் அவர்கள் விளக்கினுர்கள். தங்கள் குறைகளை - தேவைகளை அவ்வப்போது தமக்கு எழுதியனுப்பும்படியும் கேட்டுக்கொண்டார்கள். தவத்திரு அடிகளார் அவர்களோடு தேவகோட்டை ஹரிஜன நல தாசில்தார் திரு. கிருஷ்ணமூர்த்தி அய்யர், ஹரிஜனநல உதவி சேவக் திரு சந்திரசேகரன், திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் செயலாளர் திரு. ஆறு இராமச்சந்திரன் ஆகியோர் சுற்றுப் பயணத்தில் கலந்துகொண்டார்கள். செயற்குழுக் கூட்டத்திற்கு சுமார் 75 பேர் வந்திருந்தார்கள்.

## பூவாளூர் மாதர் சங்க ஆண்டுவிழா

பூவாளூர் மாதர் சங்கத்தின் முதலாவது ஆண்டு விழா 29-2-64ல் பூவாளூர் உயர்நிலைப்பள்ளியில் தவத்திரு அடிகளார் அவர்களின் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. நகர பஞ்சாயத்துத் தலைவர் திரு. எஸ். கோவிந்தராசன் அனைவரையும் வரவேற்றார். தையற்கலைக் காட்சியை திருமதி சௌமினி சுந்தரம் திறந்து வைத்தார். அன்னை கஸ்தூரிபா காந்தி அவர்களின் திருவுருவப் படத்தை திரு. என். பலாஜியும், பாரதியார் திருவுருவப் படத்தை லால்குடி ஊராட்சி ஒன்றியப்புத் தலைவர் திரு

எஸ். தங்கவேலுவும், மாதர் சங்க தையற்கலைப் பயிற்சிப் பகுதியை முசிரி கோட்டாட்சித் தலைவர் திரு. பி. எம். சபாபதி பி. ஏ. யும் திறந்து வைத்தார்கள். திருமதி ஜி. தஞ்சம்மாள், திருமதி. சரோஜினி நடராஜன் எம். ஏ. ஆகியோர் சொற்பொழிவாற்றினர். மாதர் சங்க உறுப்பினர்கள், திருச்சி சாவித்திரி வித்தியாசாலை மாணவியர் ஆகியோரின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

## நெய்வேலி கலை இலக்கிய மன்றம்

நெய்வேலி கலை இலக்கிய மன்றத்தின் ஆதரவில் 1-3-64 மாலை நெய்வேலி புதுநகர் ஆடிட்டோரியத்தில் திரு ஆர். ஆர். பிள்ளை தலைமையில் தவத்திரு அடிகளார் அவர்கள் 'இலக்கியம் ஏன்?' என்ற தலைப்பில் அரியதொரு சிறப்புரையாற்றினார்கள்.

## விருத்தாசலம் தென் ஆற்காடு மாவட்ட அ. நெ. திருக்கூட்ட செயற்குழு

தென் ஆற்காடு மாவட்ட அருள்நெறித் திருக்கூட்டத்தின் செயற்குழுக் கூட்டம் 13-3-64ல் விருத்தாச்சலம் தேவாரப் பாடசாலையில் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திருக்கூட்டத்திற்கு மேலும் அதிகமான உறுப்பினர் சேர்க்கவேண்டிய அவசியத்தையும், திருக்கூட்டம் செயற்பட வேண்டிய வழிமுறைகளையும் தவத்திரு அடிகளார் அவர்கள் விளக்கினார்கள்.

## ஸ்ரீ வீரமாகாளியம்மன் பூச்சொரிதல் விழா

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தைச் சேர்ந்த ஸ்ரீ வீரமாகாளியம்மன் கோயில் பூச்சொரிதல் விழா 3-3-64ல் சிறப்பாக நடைபெற்றது. பூத்தட்டுக்கள் சப்பரத்தில் ஏற்றிச் செல்லப் பெற்றன. அம்பாளுக்கு விசேட அலங்காரங்கள் செய்யப் பெற்றிருந்தன. தவத்திரு அடிகளார் அவர்கள் கோயிலுக்குச் சென்று அம்பாளை வழிபட்டார்கள் - கொத்தமங்கலம் சீனு, திரு. எம். எம். மாரியப்பா ஆகியோரும், உள்ளூர் வெளியூர்ப் பொது மக்களும் வழிபாட்டில் உற்சாகத்தோடு கலந்துகொண்டு பக்தியோடு அம்பாளை தரிசித்தார்கள். அம்பாளுக்கு விசேட ஆராதனைகள் செய்யப்பெற்றன.

இரவு இந்தப் பூச்சொரிதல் விழாவை முன்னிட்டு இசைத் தென்றல் எம். எம். மாரியப்பா குழுவினரின் 'பக்த நந்தனார்' நாடகம் நடைபெற்றது. பெருந்திரளான மக்கள் நாடகத்தைக் கண்டு களித்தார்கள்.

## சில்லமரத்துப்பட்டி பள்ளிகளின் ஆண்டுவிழா

சில்லமரத்துப்பட்டி பாரதி நாராயணசாமி உயர்நிலைப் பள்ளி மூத்தோர் ஆதாரப் பள்ளிகளின் ஆண்டுவிழா போடிநாயக்கனூர் பங்கஜம் பெண்கள் உயர்நிலைப்பள்ளி நிர்வாகத் தலைவர் திரு. ஏ. எஸ். எஸ். காசிராஜ் தலைமையில் நடைபெற்றது. தலைமை ஆசிரியர் திரு. எம். பரமேஸ்வரன் அனைவரையும் வரவேற்றார். திரு. என். இராசப்பன் பேசியபின் தவத்திரு அடிகளார் அவர்கள் சிறப்புச் சொற்பொழிவாற்றினார்கள்.

## ஈரோட்டில் வெற்றிபெற்ற நகர்மன்ற உறுப்பினர்கட்கு பாராட்டு

ஈரோடு அருள் நெறித் திருக்கூட்ட உறுப்பினர்களான திருமதி செல்லம் சுந்தரம், திரு. சி. அம்பாயிரம் ஆகியோர் அண்மையில் நடைபெற்ற ஈரோடு நகரசபைத்தேர்தலில் வெற்றிபெற்றமைக் குறித்துப் பாராட்டும் பொருட்டு 6- 3- 64 காலை திருத்தொண்டீஸ்வரர் ஆலயத்தில் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள், வெற்றி பெற்றவர்களைப் பாராட்டி, அவர்களின் கடமைகளை விளக்கி வாழ்த்தியருளினார்கள்.

இப் பாராட்டு விழாவின் தொடக்கமாக திருத்தொண்டீஸ்வரர் ஆலயத்தில் சிறப்பு வழிபாடு நடை பெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் வழிபாட்டில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

## ஈரோடு என். ஜி. ஓ. சங்கம்

ஈரோடு அரசிதழ் பதிவு பெறாத அலுவலர் சங்கத்தின் ஆதரவில் 6-3-64ல் சங்கக் கட்டிடத்தில் சிறப்புக் கூட்டம் நடைபெற்றது. புலவர் திரு. ந. ஜெகதீசன் பேசியபின், தவத்திரு அடிகளார் அவர்கள், அரசிதழ் பதிவுபெறாத அலுவலர்தம் பொறுப்புக்களையும் கடமைகளையும் விளக்கி, அரசு அவர்களைப் பேணிக் காக்க வேண்டும் என்று வலியுறுத்தினார்கள். செயலர் திரு. வி. ராமசாமி நன்றி கூறினார்.

Registered No. M. 7827 THAMILAGAM - Weekly 16-3-64





## அடிகளார் அருளிய நூல்கள்

| | |
|---|---|
| கொடியா கொம்பா? (மூன்றும் பதிப்பு) | 0-30 |
| திருவாசகத் தேன் | 0-25 |
| குறள் வாழ்வு | 0-50 |
| ஈழத்தில் அருள்நெறித் தந்தை<br>தொகுத்தவர் ஈழத்துச் சிவானந்தம் | 0-75 |

அருள்நெறிப் பண்ணை, குன்றக்குடி
(இராமநாதபுரம் மாவட்டம்)

## அடிகளார் சுற்றுப்பயணம்

மார்ச் 1964

| | |
|---|---|
| 18, 19. | கரூர் தாலுகா |
| 20. | திருநெல்வேலி. |
| 21. | திண்டுக்கல்.<br>மதுரை. |
| 22. | புதுவயல்.<br>திருப்பத்தூர். |
| 23. | காரைக்குடி. |
| 24. | குன்றக்குடி. |
| 25. | சென்னை. |

வெளியிடுவோர், ஆசிரியர்: ஆறு. சுப்பிரமணியன், அடிகளார் அச்சகம், குன்றக்குடி, இராமநாதபுரம் மாவட்டம். துணை ஆசிரியர்: சாமி பழனியப்பன்.